REGD. No: TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone 812818 4 பக்கம் விலை 35 காசு

**உழைப்பு**

பொதுவாக நாம் செய்யவேண்டிய காரியங்கள் ஏராளமாக உள்ளன. உணவுப் பிரச்சினையைப் போக்க கடுமையாக உழைக்கவேண்டும்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர

**கடமை**

வாழ்க்கை என்பது ஒரு கடமை. சோதனை என்பது அதன் சாதனம்.

-அண்ணல் காந்தி

மலர் 4 சென்னை 15-5-1980 வியாழன் (★) ❋ ● ❋ (✱) வெளியூர் 16-5-1980 வெள்ளி இதழ் 186

## தேர்தல் அறிக்கையில் கூறாமல் மேடையில் முழங்கும் மர்மம்

## விவசாயிகள் கடன் ரத்து விவகாரத்தில்

# தி.மு.க. அணியின் தில்லுமுல்லு

## புரட்சித்தலைவர் நிகழ்ச்சிகள்

சர்வாதிகாரத்தை எதிர்த்து ஜனநாயகத்தைக் காக்கப் புரட்சித்தலைவர் மேற்கொண்டிருக்கும் புயல் வேகச் சுற்றுப்பயண நிகழ்ச்சிகள் விவரம் வருமாறு:

**16-5-80**

(மாலை 4 மணி முதல்)

வெள்ளக்கோயில்
மூலனூர்
தாராபுரம்
காங்கேயம்
மொடக்குறிச்சி
ஈரோடு
பெருந்துறை
கோபிசெட்டிப்பாளையம்
சத்தியமங்கலம்
புளியம்பட்டி
அன்னூர்
மேட்டுப்பாளையம்

**17-5-80**

பெரியநாயக்கன்பாளையம்
கோவை கிழக்கு
கோவை மேற்கு
பேரூர்
சிங்காநல்லூர்
பல்லடம்
திருப்பூர்
பொங்கலூர்
கினத்துக்கடவு
பொள்ளாச்சி
உடுமலை
பழனி
ஒட்டன்சத்திரம்
திண்டுக்கல்

## புரட்சித்தலைவர் அம்பலப்படுத்துகிறார்

சேலம், மே 15 விவசாயிகள் கடனை ரத்துச் செய்வோம் என்று தேர்தல் அறிக்கையில் கூறாமல், மேடையில் கூறும் தி. மு. க. அணியின் தில்லுமுல்லுப் போக்கை புரட்சித்தலைவர் அம்பலப்படுத்தினார். ஓட்டு வாங்கும் தந்திரமே இது - மக்கள் ஏமாந்துவிடக்கூடாது எனவும் அவர் எச்சரித்தார்.

சேலம்மாவட்ட சுற்றுப் பயணத்தின் போது பல்வேறு ஊர்களில் நடந்த பொதுக் கூட்டங்களில் புரட்சித் தலைவர் பேசியதாவது:

தமிழகம் பல தேர்தல்களைச் சந்தித்திருக்கிறது இப்போதும் ஒரு தேர்தலை சந்திக்கிறது. இந்தத் தேர்தல் வருவதற்குக்காரணம் பொதுமக்களாகிய நீங்கள் தான்.

நாடாளுமன்றத் தேர்தல் நடந்த போது இந்திரா காங்கிரசை வெற்றிபெறச் செய்தீர்கள் அதனால் அண்ணா தி.மு.க. அரசுக்கு மக்கள் ஆதரவில்லை என்று சொல்லிக் கலைத்துவிட்டார்கள். அதனால்தான் இந்தத் தேர்தல் வருவதற்கு நீங்கள் தான் காரணம் என்கிறேன்.

அண்ணா திமுக அரசு குற்றம் செய்தது, அதனால் கலைத்தோம் என்று அவர்கள் சொல்லவில்லை. நம்பிக்கை இல்லை அதனால் கலைத்தோம் என்கிறார்கள், (நாங்கள் நம்புகிறோம் என்று கூட்டத்தினர் குரல்)

### கலைத்தது ஏன்?

நீங்கள் எங்களை நம்புவதால் தான் நாங்கள் தேர்தலில் போட்டியிடுகிறோம். இல்லையேல் போட்டியிட மாட்டோம். எதையாவது கூறி எப்படியாவது ஓட்டு வாங்கி முதலமைச்சராக வர வேண்டும் என்ற எண்ணம் எனக்கில்லை.

அண்ணா தி. மு. க. ஆட்சியை ஏன் கலைத்தார்கள்? லஞ்சம் வாங்கினோமா? ஊழல் செய்தோமா? அல்லது அரசு நிர்வாகத்தில் தலையிட்டு ஆகாத காரியங்களை செய்தோமா? என்ன குற்றம் செய்தோம் என்று கலைத்தார்கள்?

அமைச்சராவதற்கு முன் குழந்தைவேலு மீது தி. மு க அரசு வழக்குப் போட்டிருந்தது அவர் அமைச்சரான பிறகும் கூட அவர் மீதான அந்த வழக்கை நாங்கள் வாபஸ் பெறவில்லை. நாங்கள் நினைத்திருந்தால் வாபஸ் பெற்றிருக்க முடியும். ஆனாலும் நிர்வாகத்தில் தலையிடக் கூடாது நீதிப்படி நடக்கவேண்டும் என்பதால் அந்த வழக்கை வாபஸ் வாங்கவில்லை அதே போல கழகத்துக்காக வியர்வை சிந்தி உழைத்த-ரத்தம் சிந்திப் பாடுபட்ட தொண்டர்கள் பலர் மீதான வழக்குகளையும் கூட நாங்கள் வாபஸ்பெறவில்லை. நடுநிலையோடு நேர்மையாக நடக்கவேண்டும் என்பதால் வாபஸ் வாங்கவில்லை. ரத்தக் கண்ணீர் விட்டு இதை தான் சொல்கிறேன்.

### அவர்கள் கதை என்ன?

ஆனால் மத்தியில் இந்திராகாந்தி ஆட்சிக்கு வந்த இந்த மூன்று மாத காலத்தில் இந்திரா, சஞ்சய், பன்சிலால் போன்றவர்கள் மீதிருந்த எத்தனை வழக்குகளை அவர்கள் வாபஸ் வாங்கியிருக்கிறார்கள்?

எங்களைப் பொறுத்த வரையில் எங்கள் சுயநலத்துக்காக எந்தக் காரியத்தையும் செய்வதில்லை.

தமிழ்நாட்டில் அமைச்சராக இருந்த கக்கன் தியாகி. வயது முதிர்ந்தவர் காமராஜரின் அன்புக்கும், நம்பிக்கைக்கும் பாத்திரமானவர். அமைச்சர் பதவிபோனதும்குடியிருக்க வீடு கூட இல்லாமல் அவர் இருந்தார். எத்தனை காங்கிரஸ்காரர்கள் அவரைப் போய்ப் பார்த்து உதவி செய்தார்கள்?

கழகம் அரசு பொறுப்பிலிருந்த போது மாதம் 500 ரூபாய் அவருக்கு வழங்கவும், வீட்டு வாடகை கொடுக்கவும் நான் தான் உத்தரவிட்டேன். ஒரு மந்திரிக்குரிய அந்தஸ்தில் அவருக்கு அரசு மருத்துவமனைகளில் சிகிச்சையளிக்கவும் நான் உத்தரவிட்டேன்.

### தியாகத்துக்கு மரியாதை

இப்போது மதுரை ஆஸ்பத்திரியில் முத்தண்ணன் சிகிச்சை பெற்று வந்தார். அவரைபார்க்கபோனேன். அதே ஆஸ்பத்திரியில் கக்கனும் அப்போது சிகிச்சை பெற்று வந்தார். அவரையும் பார்த்தேன். அவருக்கு கழக அரசு போட்ட உத்தரவுப்படி சிகிச்சையளிக்கப்பட்டதை கண்டு மகிழ்ந்தேன்.

இப்போது இந்திராகாந்தி மதுரைக்கு வந்தாரே... பெரியவரைப் பார்த்தாரா? அதற்காக ஒரு ஐந்து நிமிடம் ஒதுக்கி பார்த்திருக்கக் கூடாதா?

கழக அரசு கக்கனுக்கு உதவியது ஏன்? அவரைக் கட்சியில் சேர்த்துக்கொள்ளவா?

இல்லை, ஒரு சிறந்த தியாகியை மதிக்க வேண்டும்; அவருக்கு உதவ வேண்டும் என்பதால் தான். தியாகிகளை மதிக்கும் இயக்கம் அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் இந்த அடிப்படையில் தான் கழக அரசு செயல்பட்டது. தியாகத்தைமதித்ததற்குப் பரிசு ஆட்சிக்கலைப்பா? அவர்கள் கலைத்தது இருக்கட்டும். இந்த ராமச்சந்திரன் ஆட்சி வேண்டுமா வேண்டாமா என்பதுபற்றி நீங்கள் இப்போதுமுடிவெடுங்கள்.

(உங்கள் ஆட்சிதான் வேண்டும்-என்று மக்கள் முழக்கம்)

என்னுடைய விருப்பமெல்லாம் தமிழகத்தின் தனித்தன்மைகாப்பாற்றப் படவேண்டும் என்பது தான். தமிழ்மொழி காக்கப்படவேண்டும். யாருக்கும் அடிமையாகக்கூடாது என்பதுதான்.

தமிழகத்தைப்பற்றியும், தமிழக முதலமைச்சர் பற்றியும் வடக்கே இருப்பவர்கள் முடிவு செய்வதை நீங்கள் ஆதரிக்கிறீர்களா?

(இல்லை - இல்லை என்று மக்கள் முழக்கம்)

அப்படியானல் நமது மாநில முதலமைச்சர் யார் என்பதை நாமே முடிவெடுக்கும் உரிமையைக் காக்கவேண்டுமானல் அண்ணா தி.மு.க. அணிக்கு ஓட்டுப் போடுங்கள்

சிலஇடங்களில் இந்திரா காங்கிரஸ் - தி. மு. க. வேட்பாளர்கள் சாராயத்தை வண்டியில் ஏற்றிக் கொண்டு தேர்தலை நடத்தப் போவதாக எனக்குத் தகவல் கிடைத்திருக்கிறது. இதைக் காவல்துறையினர் விசாரித்து, நாட்டுக்கு சந்தேகத்தைப் போக்க வேண்டும்.

சாதாரணமாகவே எங்கள் தொண்டர்களை அவர்கள் தாக்கிக் கொண்டிருக்கிறார்கள், இதில் சாராயத்தைக் கொண்டு அவர்கள் தேர்தல் நடத்தினால் என்ன நடக்கும் என்று சிந்தித்துப்பாருங்கள்,

எங்கோ தேள் கொட்டினால் எங்கோ நெறி கட்டுமாம், அது போல எங்கேயோ ஏதோ நடந்தது என்று கும்பகோணத்தில் எஸ்.ஆர்.ராதாவின் அச்சகத்தைத்தாக்கியிருக்கிறார்கள் நான் எச்சரிக்கையாகவே கூற விரும்புகிறேன். இந்தத் தேர்தலில் வன்முறை எதுவும் நடந்தால் அதற்கு இந்திராகாந்தியும் அவரது அரசுமே பொறுப்பு.

### பொய்க்கு முற்றுப்புள்ளி

எங்கள் கழகத் தோழர்கள் எத்தனை பேர் இதுவரை கொலை செய்யப்பட்டிருக்கிறார்கள்? எத்தனை பேர் தாக்கப்பட்டிருக்கிறார்கள்? இன்னும் தாக்குதலுக்கு ஆளாகிக்கொண்டுதான் இருக்கிறார்கள். ஆனால் பொய்ப்பிரச்சாரத்தின் மூலம் அவர்கள் இதை மறைக்கிறார்கள். இனி பொய்ச்சொல்லி ஏமாற்றி வெற்றிபெறும் அரசியலுக்கு முற்றுப்புள்ளி வையுங்கள். உண்மை, நேர்மைக்கு ஆதரவு தாருங்கள்.

அண்ணா தி. மு. க. ஆட்சிப் பொறுப்பிலிருந்த போது கைத்தறித் துணி தேங்கியதில்லை. ஆனால் இப்போது நிலை என்ன? 100 கோடி ரூபாய் பெறுமானமுள்ள கைத்தறி துணி தேங்கிக் கிடக்கிறது. இதன் காரணமாக ஏராளமான நெசவாளர் குடும்பங்கள் கஷ்டத்துக்குள்ளாகியிருக்கின்றன அவர்களது துயரைத் தீர்க்க திமுகவும் இந்திராகாங்கிரசும், என்ன திட்டத்தை கூறியிருக்கிறார்கள்?

விவசாயிகளின் 9 அம்சத் திட்டம் பற்றி திமுக தேர்தல் அறிக்கையில் தெளிவாக எதையும் குறிப்பிடவில்லை. விவசாயிகளின் கோரிக்கை முக்கியமான கோரிக்கை கடன் தள்ளுபடி கோரிக்கையாகும்.

அண்ணாதிமுக ஆட்சிக்கு வந்தால் விவசாயிகளின் கடன் தள்ளுபடிக்கு உதவ மத்திய அரசைவற்புறுத்துவோம். மத்திய அரசு மறுத்தால் ஐந்தாண்டுக் காலத்துக்குள் கழக அரசே அந்தக் கடனைத்தள்ளுபடிசெய்யும் என்று அண்ணா திமுக தேர்தல் அறிக்கையில் திட்டவட்டமாக தெளிவாகக் குறிப்பிட்டிருக்கிறோம்.

ஆனால் திமுக தேர்

(4-ம் பக்கம் பார்க்க)

## புரட்சித்தலைவரிடம் பழக்கடை பாண்டி வாழ்த்து பெற்றார்

சேலம், மே 15-நேற்று கழகத்தில்இணைந்தமதுரை மாநகர் மாவட்டதி.மு.க. பொருளாளரும், தலைமைச் செயற்குழு உறுப்பினருமான பழக்கடை பாண்டி சேலத்திற்கு சென்று புரட்சித்தலைவரை சந்தித்து மாலை அணிவித்து வாழ்த்துப் பெற்றார்.

அப்போது பாலகுருவா ரெட்டியார், மா. ரத்தினம் ராஜேந்திரன் ஆகியோர் உடனிருந்தனர்.

கழகத்தில சேர்ந்த பழக்கடை பாண்டி நிருபர்களிடம் கூறியதாவது:

திமுகவின் தொண்டர்கள் அனாதைகளாக்கப் பட்டிருக்கின்றனர்.

### மனக்குமுறல்

அந்த மனக்குமுறலின் முதல் ஆளாக நான் வெளியே வந்திருக்கிறேன் என்னைத் தொடர்ந்து ஏராளமானோர் வருவார்கள்.

தி. மு. க. சார்பில்எந்த தேர்தல் வேலையும் நடக்கவில்லை. வேலைகள் ஸ்தம்பித்து போயிருக்கின்றன. கருணாநிதியின் போக்கு தொண்டர்களுக்கு பேரிடியாக இருக்கிறது.

முதல்வர் பதவிக்கு வர வேண்டும் என்பதற்காக கட்சியையே அடகுவைத்து விட்டார் கருணாநிதி.

சுயநலத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிறாரே தவிர தொண்டர்களின் தியாகத்தை மறந்துவிட்டார்.

இவ்வாறு பழக்கடை பாண்டி கூறினார்.

## கழகமே ஆட்சியை கைப்பற்றும்: புரட்சித் தலைவர் சிறப்புப் பேட்டி

சேலம், மே15 -மக்களின் ஆதரவுகழகத்தின் பக்கமே கழகமே ஆட்சியை கைப்பற்றும் என்று புரட்சித் தலைவர் பேட்டியின் போது கூறினார்.

சேலத்தில் புரட்சித் தலைவர் நிருபர்களுக்கு பேட்டியளித்தார்.

பேட்டியின்போது தேர்தலில் வெற்றிவாய்ப்பு எப்படி இருக்கும் என்று நிருபர்கள் கேட்டதற்கு புரட்சித்தலைவர் அளித்த பதில் வருமாறு:

கடந்த நாடாளுமன்றத் தேர்தலின்போது கழகத்திற்கு மக்கள் தந்த ஆதரவு இப்போதைய சூழ்நிலையில் மாறுபட்டிருக்கிறது.

1972ம் ஆண்டு திமுகவிலிருந்து நான் தூக்கி எறியப்பட்ட போது என்மீது எத்தகைய பாச உணர்வை- அன்பை- ஆதரவை தமிழக மக்கள் காட்டினார்களோ அதைவிட மக்களின் உணர்வுகள் தாய் பாசத்துடனும், உடன்பிறப்பு உணர்வுடனும் காண்பித்து ஆசி கூறுவதைப் பார்க்கிறேன்.

மக்களின் ஆதரவு கழகத்திற்கு அமோகமாக இருக்கிறது. கழகம் ஆட்சியைப் பிடிக்கும்.

இவ்வாறு புரட்சித்தலைவர் கூறினார்.

**குற்றக்கூண்டில் கருணாநிதி**

2ம் பக்கம்

## விருந்துக்கு வாழை இலை-விஷக் கடிக்குப் பச்சிலை
## மருந்துக்கு துளசி இலை-மானம் காக்க இரட்டை இலை

# நமது மேடை

## திருப்பரங் குன்றத்தில் காளிமுத்து ஓட்டுவேட்டை

மதுரை, மே 15-திருப்பரங் குன்றம் தொகுதியில் போட்டியிடும் காளிமுத்து தீவிரமாக ஓட்டுவேட்டையாடி வருகிறார் வீடுவீடாக சென்று அவர் வாக்காளர்களைச் சந்தித்து வருகிறார்.

தினந்தோறும் காலை 6மணிக்கே வாக்குகள் சேகரிக்கும் பணியைத் தொடங்கி விடுகிறார்.

ஓட்டுகேட்டுவரும் காளிமுத்துவுக்கு அவர்செல்லும் வீடுகளில் சிறப்பான வரவேற்பு அளிக்கப்படுகிறது. தாய்மார்கள் தங்கள் வீடுகளுக்கு முன்னால் இரட்டை இலைக் கோலம் போட்டு வரவேற்கிறார்கள். காளிமுத்துவுக்கு ஆரத்தி சுற்றி வெற்றித் திலகமிட்டு எங்கள் ஓட்டு இரட்டை இலைக்கே என உறுதி பொங்கக் கூறுகின்றனர்.

காலையில் இருந்தே ஓட்டு வேட்டையாடும் காளிமுத்து மாலையில் ஊழியர் கூட்டங்களிலும் இரவில் பொதுக்கூட்டங்களிலும் கலந்துகொண்டு பேசுகிறார்.

திருப்பரங்குன்றம் தொகுதியில் இ. காங்கிரஸ் - தி.மு.க. வினரிடையே கடுமையான அதிருப்தி நிலவுகிறது.

இ. காங்கிரஸ் வேட்பாளராக மனுத் தாக்கல் செய்திருந்த வக்கீல் சீனித்தேவருக்கு கருணாநிதி ஞானஸ்நானம் செய்து திடீர் தி.மு.க. வேட்பாளராகதிருப்பரங்குன்றத்தில் நிறுத்தி உள்ளார்.

கா. காளிமுத்துவுடன் மஜ. ரத்தினம், சோணைமுத்து, சிவசங்கரன், அன்னக்கொடி, மலைச்சாமி லெட்சுமணன் மற்றும் தோழமைக் கட்சியினர் சென்று தீவிரமாக ஓட்டு வேட்டையாடி வருகின்றனர்.

### பேச்சாளர் முகவரி

கோவை இளையதம்பி
பழஞ்சநல்லூர்
காட்டு மன்னார் கோவில் வட்டம்
தெ. ஆ. மாவட்டம்

கவிஞர்
மு. ஆலயசாமி
5-47 டாக்டர் ஜாகிர உசேன் தெரு,
மொண்டியம்மன் நகர் 2
சென்னை-600052

மு. நா. தேவராசன்
மேட்டூர் மின்திட்ட அமைப்பாளர்
பேருந்து நிலையம்,
மேட்டூர் அணை-636401

ஆணையூர் இஸ்மாயில்
17, அவ்வைநகர்
திருவான்மியூர்
சென்னை-41

### கலைக்குழு முகவரி

''தருமத்தின் வெற்றி'' கலை நிகழ்ச்சி
மா. கோபாலகிருஷ்ணன்
எண் 7-8வது தெரு
என் எச் ரோடு,
டாக்டர் அம்பேத்கார் நகர்
சென்னை-600003

### அமைந்தகரை

15-5-80 வியாழன்மாலை 7மணிக்கு அய்யாவுநாயுடு காலனி (அமைந்தகரை காவல் நிலையம்) க. தேவராஜன் தலைமையில் பேசுவோர்: டாகடர்ஹண்டே, வ. கோதண்டராமன், நா. துவாரகநாதன், ஜெ.பாலாஜி.மற்றும்பலர் வாசன் விமலா குழுவினரின் ''தாலீ இங்கே தங்கம் எங்கே'' என்ற கலை நிகழ்ச்சி உண்டு.

### ராயபுரம்

15.5.80இன்று மாலை 7 மணிக்கு ராயபுரம் மாதா கோயில் அருகே நடக்கும் கழகஅணிதேர்தல் பிரச்சாரப் பொதுக்கூட்டத்தில் டாக்டர் எச்.வி. ஹண்டே பார்வதிகிருஷ்ணன், கே.டி.கே. தங்கமணி, புரசைத் தொகுதி கழக அணி வேட்பாளர் வலம்புரி ஜான். ராயபுரம் கழகஅணி வேட்பாளர் தா. பாண்டியன் ஆகியோர் பேசுகின்றனர்.

### சேப்பாக்கம்

16 5 80 வெள்ளிமாலை 7மணிக்கு ஜானிபாட்சா தெரு (மிட்லண்டு தியேட்டர் பின்புறம்) ஏ. மகாலிங்கம் தலைமையில் பேசுவோர்:

பாவலர் முத்துசாமி, திருமதி சந்திரா, அன்பு ரோஸ், பச்சையப்பன், வி.ராஜ்குமார் எஸ்.வி. மாரிமுத்து, மகாலிங்கம், இரா சின்னப்பன், கண்ணம்மாள், கோட்டீஸ்வரன், ஆறுமுகம் மற்றும் பலர்,

### ஷெனாய் நகர்

16-5-80 வெள்ளி மாலை 7 மணிக்கு பெரிய கூடலில் (திரு.வி.க பள்ளி அருகில்) பி. எல் ராதாகிருஷ்ணன் தலைமையில் பேசுவோர்:

நூர்பாபா, டாக்டர் ஹண்டே, வ கோதண்டராமன், வி கோவிந்தன், குணசேகரன். எம் ஆறுமுகம் மற்றும் பலர். குத்தாலம் அரங்கநாதன் குழுவினரின் கலைநிகழ்ச்சி நடைபெறும்.

### *இயக்குனர் ஆர். கே. சண்முகம் நிகழ்ச்சிகள்

மே 15ந் தேதி முதல் 25ந் தேதிவரை திருச்செங்கோடு, சேலம், ராசிபுரம், சேந்தமங்கலம், 28ந்தேதி வில்லிவாக்கம், அம்பத்தூர்,

### *பலகுரல்அரசு டி காசிநாதன் நிகழ்ச்சிகள்

மே 15 குன்றத்தூர், 16 விழுப்புரம், 17(திருச்சி) வரகம்நரி, 18 சேலம்

### பேச்சாளர் முகவரி:

பலகுரல் டி. காசிநாதன்
106 8, ஆற்காடு ரோடு
கோடம்பாக்கம்
சென்னை-24

★ விலைவாசி உயர்ந்துகொண்டே போகிறது!
★ சட்டம் ஒழுங்கு சீர்குலைவு!
★ உறுதிமொழிகள் நிறைவேற்றப்படவில்லை!

# மத்தியில் இ. காங்[illegible] ஆட்சி 100 நாள் சாதனை பற்றி மக்கள் கருத்து

### "சண்டே" ஏடு படப்பிடிப்பு

கல்கத்தா, மே 14-மத்தியில் இந்திராகாந்தி தலைமையில் இந்திராகாங்கிரஸ் ஆட்சிப் பொறுப்பை ஏற்று நூறு நாட்களுக்கு மேல் ஆகியும் நாட்டில் விலைவாசி உயர்வு கட்டுப்படுத்தப்படவில்லை என்றும் சட்டம் ஒழுங்கு சீர்குலைந்து போய்விட்டதாகவும் மக்கள் கருத்து தெரிவித்துள்ளனர்.

பிரபல ஆங்கில வார ஏடான 'சண்டே' கல்கத்தா, சென்னை, பம்பாய், டெல்லி ஆகிய நான்கு நகரங்களில் கருத்துக் கணிப்பு நடத்தியதில் இத்தகவல் தெரியவந்துள்ளது

கடந்த நாடாளுமன்ற தேர்தலின்போது நாங்கள் ஆட்சிக்கு வந்தால் நாட்டில் விலைகள் கட்டுப்படுத்தப்படும் என்றும், சட்டம் ஒழுங்கு நிலவரம் சீர்படுத்தப்படும் என்றும் பிரச்சாரம் செய்யப்பட்டது.

தற்போது இந்திரா காந்தி தலைமையில் மத்தியில் இந்திரா காங்கிரஸ் ஆட்சிப் பொறுப்பேற்று 100 நாட்களுக்கு மேல் ஆகிறது.

கல்கத்தாவில் இருந்து வெளிவரும் 'சண்டே' பத்திரிகை இந்திராவின் 100 நாள் ஆட்சிச் சாதனை குறித்து டெல்லி, பம்பாய் கல்கத்தா, சென்னை ஆகிய நகரங்களில் கருத்துக்கணிப்பு நடத்தியது.

பலதரப்பட்ட மக்களிடமும் இந்திரா காந்தியின் ஆட்சிபற்றி கருத்து கேட்கப்பட்டது.

இதன் மூலம் கிடைத்த முடிவு விவரம் வருமாறு:

மத்தியில் இந்திராகாங்கிரஸ் ஆட்சிப்பொறுப்பை ஏற்ற பிறகு விலைவாசி உயர்வு கட்டுப்படுத்தப்பட்டதா என கேட்கப்பட்டது.

சென்னை நகரில் இக்கேள்விக்கு பதிலளித்தவர்களில் 57 சதவிகிதத்தினர் முன்பிருந்ததைவிட அத்தியாவசியப் பண்டங்களின் விலைகள் வெகுவாக உயர்ந்து விட்டது என்றும் விலையுயர்வு கட்டுப்படுத்தப்படவில்லை என்றும் தெரிவித்துள்ளனர்.

இதேபோல் டெல்லியில் 55 சதவிகிதத்தினரும் பம்பாயில் 61 சதவிகிதத்தினரும், கல்கத்தாவில் 63 சதவிகிதத்தினரும் இந்திரா காந்தி விலை உயர்வைக் கட்டுப்படுத்தவில்லை எனத் தெரிவித்துள்ளனர்.

### சட்டம் ஒழுங்கு

இதேபோல் நாட்டில் சட்டம் ஒழுங்கு நிலவரம் தற்போது மிகவும் மோசமாகியுள்ளதாகவும் பத்திரிகைக்குப் பேட்டியளித்தவர்களில் பாதிக்கு மேற்பட்டோர் தெரிவித்துள்ளனர்.

இதேபோல் தேர்தலின் போது இந்திரா காந்தி கொடுத்த உறுதிமொழிகள் நிறைவேற்றப்பட்டனவா என்ற கேள்விக்கு பதிலளித்தவர்களில் பம்பாயில் 45சதவிகிதத்தினர் உறுதிமொழிகள் நிறைவேற்றப்படவில்லை எனத் தெரிவித்துள்ளனர். சென்னையில் 36 சதவிகிதத்தினரும், இந்திராகாந்தி கொடுத்த உறுதிமொழிகள் நிறைவேற்றப்படவில்லை எனத் தெரிவித்துள்ளனர்.

# குற்றக்கூண்டில் கருணாநிதி (4)

''1967-ஆம் ஆண்டு அண்ணாவின் அமைச்சரவையில் நீர்பொதுப்பணி அமைச்சராகஇருந்தீரா?''

''ஆமாம்''!

''அப்போது, வீராணம்தண்ணீரை சென்னைக்குக் கொண்டுவரும் திட்டத்தைத் தயாரித்தீரா?''.

''ஆமாம்''!

''அந்தத் திட்டம் உதவாத திட்டம் என்று அண்ணா கூறினாரா''?

''ஆமாம்''!

''அண்ணாவே வேண்டாம் என்று சொன்ன அந்தத் திட்டத்தை நீர் தொடர்ந்து வற்புறுத்தி வந்ததுண்டா''?

''ஆமாம்''!

''ஏன் அப்படி வற்புறுத்தினீர்?''

''தேவை என்பதால் வற்புறுத்தினேன்!''

''என்ன தேவை-பணத் தேவையா?''

''. . . . . . .''

அண்ணாவின் மறைவுக்கு பிறகு அந்த திட்டத்தை துரிதபபடுத்தினீரா?''

''ஆமாம்!''

''எவ்வளவு ரூபாயில் திட்டம் தீட்டினீர்?''

''23 கோடி ரூபாயில்!''

''எவ்வளவு செலவானது?''

''30 கோடி ரூபாய்!''

''திட்டம் முடிந்துவிட்டதா? வீராணம் தண்ணீர் சென்னைக்கு வந்துவிட்டதா?''

''. . .''

''அந்த திட்டம் என்ன கதி ஆனது?''

''. . .''

''நெய்வேலி மார்க்கத்தில் சாலையோரங்களில் கிடக்கும் உடைந்துபோன சில நூறு குழாய்கள்தான் மிச்சம் இல்லையா?''

''. . . .''

''இந்த வீராணம் திட்டம் பற்றி ஊழல் புகார் கூறப்பட்டதா?''

''ஆமாம்!''

''அந்த ஊழல் புகார் பற்றி சர்க்காரியா கமிஷன் விசாரித்ததா?''

''ஆமாம்!''

''இந்தத் திட்டத்தில் ஊழல் நடந்திருக்கிறது என்று சர்க்காரியா கமிஷன் தனது அறிக்கையில் கூறியிருக்கிறதா?''

''ஆமாம்!''

''ஆக யாருடைய சவுகரியத்துக்காகவோ யாரோ சிலர் கொள்ளை அடிப்பதற்காகவோ தான் இந்தத் திட்டத்தை தீட்டினீரா''?

''. . . .''

''மக்கள் வரிப்பணத்தை இப்படித் தேட்டை போடும் பேர்வழிகள் மீண்டும் கோட்டைக்கு வரலாமா?''

''. . . . . .''

Published by K. Ravindran on behalf of Thangamani Publications 275, Avvai Shanmugam Salai, Madras-14 and Printed by him at Print House, 1. First Main Road, United India Colony, Madras-24. Editor : E. PARASURAMAN

# தேர்தல் களம்

தா. பாண்டியனை ஆதரித்து

## ஆர்.எம்.வீ. துவக்கும் சைக்கிள் ஊர்வலம்

சென்னை, மே 15-ராயபுரம் தொகுதியில் மாபெரும் சைக்கிள் ஊர்வலம் நடக்கிறது. ஆர், எம். வீ. சைக்கிள் ஊர்வலத்தைத் துவக்கிவைக்கிறார்.

ராயபுரம்தொகுதி கழக அணி வேட்பாளராகப் போட்டியிடும் தா.பாண்டியனை ஆதரித்து 18ந்தேதி (ஞாயிறு) பிற்பகல் 2 மணிக்கு மாபெரும் சைக்கிள் ஊர்வலம்நடக்கிறது.

மன்னார்சாமி கோயில் தெருவல உள்ள கழக அணி தொகுதி தேர்தல் அலுவலகத்தின அருகிலிருந்து இந்த ஊர்வலம் புறப்படுகிறது.

ஆர் எம் வீ ஊர்வலத்தை துவக்கி வைக்கிறார.

ராயபுரம் தொகுதி அனைத்து வட்டங்களின் முக்கிய வீதிகளின் வழியாக இந்த ஊர்வலம் செல்கிறது

திரளான கழக மன்ற தோழமைக் கட்சி செயல வீரர்கள் கொடிகளுடன் இந்த ஊர்வலததில் கலந்து கொள்ளுமாறு தொகுதி கழக அமைப்பாளர் ஏ தாஸ் கேட்டுக் கொண்டுளளார்.

## தா. பாண்டியன் வாக்குகள் சேகரிப்பு

சென்னை, மே 15 இராயபுரம் தொகுதி ஜனநாயக முறபோக்கு கூட்டணி வேட்பாளர் கா. பாண்டியன் சென்னை 6வதுவட்டத்தைச்சார்ந்தமீனவர்பகுதி, பவர்குப்பம, காசிபுரம், புதுமனைக்குப்பம், சிங்காரவேலாநகர், காசிமாநகர், ஆகிய பகுதிகளில் மீனவ மக்களை சந்தித்து ஓட்டு வேட்டையாடினர். ஒவ்வொரு வீட்டுக்கும்சென்று வாக்குகளை திரட்டினார். திரளான கழகதோழமைக் கட்சித் தோழர்கள் உடன் சென்றனர்.

## *தேர்தல் அலுவலகம் திறப்பு

சென்னை, மே 15-இன்று 15-நதேதி மாலை6மணிக்கு பட்ரோடில் தேர்தல் அலுவலகத் திறப்புவிழா நடைபெறுகிறது கே ராமசாமி தலைமையில் இருதயராஜ் முன்னிலையில்எஸ்எம்துரையரசன் தேர்தல் அலுவலகததை திறந்துவைக்கிறார் வேட்பாளர் அ துல்ரசாக் அனகாபுத்தூர் ராமலிங்கம், திருச்சி சுசீலா ஆகியோர் பேசுகின்றனர்.

தங்கராசன் நீலா கலைக்குழுவின் 'வெற்றி நமதே' என்ற கலைநிகழ்ச்சி நடைபெறும்.

## தேர்தல் அலுவலக முகவரி

ராயபுரம் தொகுதி
(C. P. I.)
தா. பாண்டியன்
175 மன்னார்சாமி கோவில், தெரு
ராயபுரம்
சென்னை-13
போன்: 551394

*

தி மு க விலிருந்து விலகி

## கழகத்தில் சேர்ந்த ஆரணி தோழர்கள்

ஆரணி, மே. 15 ஆரணியில் முன்னாள் எம். எல் ஏ வி ஆச்சுனன்தலைமையில் நடைபெற்ற வேட்பாளா அறிமுக விழாவில் ஜி விஸ்வநாதன் கலந்துகொண்டு பேசினா

அப்போது ஆரணி முன்னாள் நகர மன்றத்தலைவர் எதிராஜன் தலைமையில் வி முரளி, ஏ மகராஜி, சி ராஜி, டி மண்ணு, ஏ. குப்பன் உட்பட 50 பேர் கழகத்தில் இணைந்தனர்

## சென்னையில் மகளிர் அணி தீவிர பிரச்சாரம்

சென்னை, மே 15-சென்னை நகரில் சந்திரா தலைமையில் கழக மகளிர் அணியினர் தீவிர தேர்தல் பிரச்சாரத்தை மேற்கொண்டுள்ளனர்,

20-ந் தேதி காலை 8 மணிக்கு கோடம்பாக்கம் ஆற்காடு ரோடிலுள்ள தென் சென்னை எம். ஜி. ஆர். மன்ற அலுவலகத்திலிருந்து தியாகராயநகர் தொகுதி மகளிர் அமைப்பாளர் ராஜகாபாய் கிருஷ்ணன் தலைமையில் புறப்பட்டு கழக அணி வேட்பாளர் டாக்டர் சவுரிராஜனை ஆதரித்து பிரச்சாரம் செய்கின்றனர்.

21-ந்தேதி காலை 8மணிக்கு சட்டமன்ற கட்சி அலுவலகத்திலிருந்து திருவல்லிக்கேணி தொகுதி மகளிர் அமைப்பாளர் டி. கனகம்மாள் தலைமையில் புறப்பட்டு திருவல்லிக்கேணி கழகஅணி வேட்பாளர் வேகி ஸ்ரீதரனை ஆதரித்து பிரச்சாரம் செய்கின்றனர்.

22ந் தேதி காலை 8மணிக்கு தலைமைக்கழகத்திலிருந்துமயிலைத்தொகுதி மகளிர் அமைப்பாளர் எஸ்ராதாபாய் தலைமையில் புறப்பட்டு கழக வேட்பாளர் டி. கே. கபாலிக்கு ஆதரவு கேட்டு பிரச்சாரம் செய்கின்றனர்.

23ந்ததியிலிருந்து 29ந் தேதிவரை தென் மாவட்டங்களில் போட்டியிடும் கழக வேட்பாளர்களை ஆதரிதது வாக்குகள் கேட்க தென் சென்னை மாவட்ட மகளிர் அணி புறப்பட்டுச் செல்கிறது.

இந்த தகவலை தென் சென்னை மாவட்டம் மகளிர் அணி அமைப்பாளர் சந்திராமோகன் தெரிவித்துள்ளார்.

கருநாடக மாநிலத்தில்

## அண்ணா தி. மு. க. ஆலோசனை கூட்டம்

பெங்களூர், மே 15 தமிழகத்தில் நடக்கவிருக்கும் சட்டமன்ற தேர்தலையொட்டி கருநாடக மாநிலம், பெங்களூர் 18-வது வட்டம் சட்டி மார்க்கெட் அண்ணா தி.மு.க உறுப்பினர்களின் அவசர ஆலோசனைக் கூட்டம் நடக்கிறது.

இம்மாதம் 18ந் தேதி ஞாயிறு மாலை 4 மணிக்கு வாழைமண்டிவீசி ஸ்டேட் ஓட்டலில் இக்கூட்டம் நடக்கிறது உறுப்பினர்கள் அனைவரும் தவறாமல் கலந்து கொள்ளும்படி வட்ட அமைப்பாளா எம தங்கவேலு கேட்டுக் கொள்கிறார்.

# இந்திராவை எதிர்த்த தீனன் - பாபு சாகவோ?
# இந்திராவுடன் கருணாநிதி கைகோர்த்து போகவோ?

ராஜாமுகமது பெருமிதம்:

# கைத்தறிநெசவாளர்கட்கு பாதுகாப்புக் கொடுத்த புரட்சித்தலைவரின் ஆட்சி

மதுரை, மே 15- கைத்தறி நெசவாளர்களுக்குப் பாதுகாப்புக் கொடுக்கும் நடவடிக்கைகளை மேற்கொண்ட ஆட்சி புரட்சித்தலைவரின் ஆட்சிதான என்று ராஜா முகமது பெருமிதத்துடன் கூறினர்.

மதுரை கோரிப்பாளையத்தில் கழகப் பொதுக் கூட்டம் நடந்தது. என். மேகநாதன் தலைமை வகித்தார்.

கே ராஜாமுகமது லெட்சுமிநாராயணன் பட்டுராசன், அப்சர் உசேன் முகமது இப்ராகிம் முனவர் செரீப், மதுரை ஜமால், சாது ராசன், கே எஸ் ராசேந்திரன், கிருபாகரன், ஷெரீப் (இந்தியகம்யூனிஸ்ட்) ஆகியோர் பேசினார்கள்.

கூட்டத்தில் ராஜா முகமது பேசியதாவது:-

அரசியல் சட்டம் நமக்கு 2 உரிமைகளை வழங்கியிருக்கிறது. ஒன்று நாடாளுமன்ற உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் உரிமை, மற்றொன்று சட்டமன்ற உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் உரிமை.

## நியாயம் கேட்கிறோம்

தமிழ்நாடு அரசைக் கலைத்ததன்மூலம் நமது உரிமைகளில் ஒன்றை இந்திரா பறித்திருக்கிறார்.

இந்த அரசைக் கலைத்தது நியாயம்தானா என்று நியாயம் கேட்க இந்தத் தேர்தலில் போட்டியிடுகிறோம்.

நாட்டில் ஜனநாயகம் இருப்பதால் தான் இந்து, முஸ்லிம், கிறிஸ்தவ மதங்களைச் சேர்ந்த சகோதரர்கள் ஒற்றுமையாக இருக்கிறார்கள். ஒரு சர்வாதிகாரி என்றால் அவர் சார்ந்திருக்கும் மதத்தை மற்றவர்கள் மீது திணிக்கமாட்டாரா?

எதேச்சாதிகாரப் போக்கை தட்டிக்கேட்காவிட்டால் நாட்டில் ஜனநாயகம் செத்துவிடும்.

கடந்த மார்ச் மாதம் தமிழக நிதிநிலை அறிக்கையை மத்திய நிதி அமைச்சர் ஆர். வெங்கட்ராமன் நாடாளுமன்றத்தில் அரை மணி நேரத்திலேயே தாக்கல் செய்தார். நிதிநிலை நன்றாக இருப்பதாக பாராட்டு தெரிவித்தார்.

## கொடுத்துப் பழகியவர்

பணவிஷயத்தில் புரட்சித்தலைவர் கண்டிப்பானவர். அவருக்குக் கொடுத்துப் பழக்கமே தவிர எடுத்துப் பழக்கமல்ல.

கழகத்திலிருந்து வெளியேறிய மனோகரன், தன்னை அவமானப்படுத்தியதால்தான் வெளியேறியதாகச் சொன்னார். அவரது வாதப்படியே, அவரை அவமானப்படுத்திய விஷயம் 31மாதம் கழித்து ஆட்சி கவிழ்ப்புக்குப்பிறகு தெரிந்திருக்கிறது அதாவது அவருக்கு சூடு சொரணைதெரிய 31மாதம் ஆனது.

அந்த மனோகரனாலும் புரட்சித் தலைவர் அரசு மீது குற்றம் சொல்ல முடியவில்லை.

புரட்சித் தலைவர் அமைச்சர்களை குமாஸ்தா போல நடத்தினார் என்று எட்மண்ட் சொன்னார். குமாஸ்தா வேலை என்ன கேவலமா? தமிழகத்தில் 32 லட்சம் குடும்பம் குமாஸ்தாக்களை நம்பி இருக்கிறது.

எட்மண்ட் போய்ச் சேர்ந்த இடம் எப்படிப்பட்ட இடம்? சில வேலைகள் செய்வதற்காகவே சிலர் அமைச்சர்களாக ஆக்கப் பட்டார்களே? இது எட்மண்டிற்குத் தெரியாதா?

அப்படிப்பட்ட கேவலமான தலைமையா இங்கே இருக்கிறது?

## புராணம் வரும்

கருணாநிதி என்றால் வீராணம்முதல் கோதுமை பேரம் வரை ஒரு ஊழல் புராணமே பாடமுடியும்.

காவல் துறையினருக்கு சங்கம் வேண்டுமா, வேண்டாமா என்பது குறித்து தி. மு. க.வின் தேர்தல் அறிக்கையில் ஒன்றும் சொல்லவில்லை. போலீசார் சங்கம் வைப்பது நினைத்துப் பார்க்கக்கூடாதென்று கருநாடக முதல்வர் குண்டுராவும், பாண்டிச்சேரி முதல்வர் ராமச்சந்திரனும் அறிவித்துவிட்டார்கள்.

போலீஸ் போராட்டத்தின்போது வேலைநீக்கம் செய்யப்பட்ட காவல் துறையினர்பற்றி புரட்சித் தலைவருடன் 5 நாள் விவாதித்தோம்.

600 பேர் உடனடியாக வேலைக்கு எடுத்துக் கொள்ளப் படுவார்கள் என்று புரட்சித்தலைவர் சட்டசபையில் அறிவித்தார்.

3 மாதமாக ஆளுநர் ஆட்சி நடக்கிறது. காவல் துறையினரை வேலைக்கு எடுத்தார்களா?

நடிகர் முதலமைச்சராகலாமா என்று கேட்டார்கள் புரட்சித்தலைவர் முதல்வரான பிறகு முதல்வர் நடிக்கலாமா என்றார்கள். வேறு என்ன செய்யச் சொல்கிறாய்?

## உன்னைப்போல திருடவா?

புரட்சித் தலைவருக்குத் தெரிந்த ஒரே தொழில் நடிப்பது. செய்யும் தொழிலே தெய்வமென்று நினைக்கிறார்.

உன்னைப்போல் திருடச் சொல்கிறாயா? வீராணம், கூவம், சர்க்கரை, பூச்சிக்கொல்லி மருந்து போல லஞ்ச ஊழல் செய்து பணம் சேர்க்கச் சொல்கிறாயா?

பிரதமர் இந்திராவே சினிமாவில் தோன்றுகிறாரே? புரட்சித் தலைவர் நடிக்கக் கூடாது என்று கருணாநிதி கூறுகிறார். இவர் கதை வசனம் மட்டும் எழுதுவாராம்?

தென்னாற்காடு மாவட்டத்தில் ஒரு தாசில்தாரை ஆர் டி ஓ வாகப் பதவி உயர்த்தி மார்ச்மாதத்தில் உத்தரவு போட்டார்கள். உத்தரவு அவரதுவீட்டிற்கு போகிறது. அவரது மனைவிக்கு திகைப்பு. தனது கணவருக்கு ஏற்கனவே இதைவிட பெரிய பதவியான சிவலோகபதவி கிடைத்து விட்டதே? என்று திகைத்திருக்கிறார்.

## முஸ்லிம்களுக்கு கழக அரசு சலுகைகள்

டிசம்பர் மாதம் இறந்த தாசில்தாருக்கு மார்ச் மாதம் பதவி உயர்வு. இது கோமாளித்தனமாக இல்லையா?



புரட்சித்தலைவர் ஆட்சியில்தான் 350க்கு மேற்பட்ட இஸ்லாமிய இலக்கியங்களை ஆராய்ச்சி செய்ய மதுரை காமராஜர் பல்கலைக் கழகத்தில் உமறுப் புலவர் பெயரால் ஆராய்ச்

(8-ம் பத்தி பார்க்க)

கருநாடக மாநில

கழக பொருளாளர்

## தாமரைசெல்வன் அரக்கோணம் தொகுதியில் பிரச்சாரம்

அரக்கோணம், மே 15- கருநாடக மாநில கழக பொருளாளர் இரா. தாமரைச் செல்வன் தலைமையில் கழகத் தோழர்கள் பிரச்சாரம் செய்ய அரக்கோணம்வந்திருக்கின்றனர் அரக்கோணம்தொகுதியில் போட்டியிடும் கழக வேட்பாளர் விஜயசாரதி வெற்றிக்காக இவர்கள் தீவிர தேர்தல் பிரச்சாரம் செய்கின்றனர்.

தேர்தல் முடியும் வரை இந்தப்பகுதியில் இருந்து பிரச்சாரம்செய்கின்றனர்.

இரா. தாமரைச் செல்வனுடன் தொடர்புகொள்ள விரும்புவோர் 31 போல் நாயுடு வீதி, பழனிப் பேட்டை, அரக்கோணம், 631002 என்ற முகவரியில் தொடர்பு கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

## புரட்சிவாணன் நிகழ்ச்சிகள்

மே 17 முதல் 20 வரை- மதுரை, 21 முதல் 23 வரை- திருநெல்வேலி 24, 25- கன்னியாகுமரி, நாகர்கோவில், குளச்சல், கிள்ளியூர்' பத்மநாபபுரம், 26, 27, 28 சென்னை.

லஞ்ச வழக்கிலிருந்து தப்பித்து பதவி பெற சரணாகதி அடைவதா?

கருணாநிதியைப் போல்

# மானம்கெட்ட பிழைப்பு தேவை இல்லை

## புரட்சித்தலைவர் ஆவேசப் பேச்சு

சேலம், மே 15- "லஞ்ச ஊழலில் இருந்து தப்பிக்கவும் பதவி பெறவேண்டும் என்ற ஆசையிலும் கருணாநிதி சரணாகதி அடைந்துள்ளார். நானும் தன்மானத்தை விட்டுக்கொடுத்திருந்தால் முதலமைச்சர் பதவியில் இருந்திருக்கமுடியும். எனக்கு அப்படிப்பட்ட மானம் கெட்ட பிழைப்பு தேவையில்லை" என்று புரட்சித்தலைவர் ஆவேசமாகக் குறிப்பிட்டார்.



நெய்வேலியில் நடந்த பிரம்மாண்டமான பொதுக் கூட்டத்தில் புரட்சித்தலைவர் பேசுகையில் கூறியதாவது:

உடன் பிறந்தே கொல்லும் நோய்போல சிலர் இருக்கிறார்கள். சிலர் நமது முதுகில் குத்திவிட்டு இங்கே இருந்து சென்றனர். அவர்கள் ஏமாறக்கூடிய காலம் வந்து விட்டது.

நம்மை பொறுத்தவரை நாம் தெளிவாக இருக்கிறோம் நமது கொள்கையும் தெளிவானது. தன்மானத்தை விட்டுத் தராதவர்கள் பலர் இருக்கும் கழகம் இது.

நாம் தன்மானத்தை விட்டுத்தராததால் தான் இரண்டரை ஆண்டுகாலத்தில் அரசு டிஸ்மிஸ் செய்யப்பட்டது.

கழக ஆட்சியில் ஊழல் நடக்கவில்லை. நீதி நிர்வாகத்தில் கட்சிக்காரர்கள் தலையிடவில்லை.

சிலர் புகார் கூறியிருக்கலாம். அப்படிப் புகார் கொடுத்து இருந்தாலும் விசாரணை கமிஷன் போடவில்லை. காரணம் சொல்லாமலே அரசைக் கலைத்தார்கள்.

லஞ்ச ஊழலின்றி நேர்மையாக நடந்த ஆட்சியைக் கலைத்தார்கள்.

மக்கள் அமைத்தஅரசை மக்கள் அனுமதித்த 5 ஆண்டு காலம் முடியும் முன்பே கலைத்தனர். நாடாளுமன்றத் தேர்தலில் விலைவாசியை குறைப்போம். தங்கம் விலையைக் குறைப்போம் என்று ஓட்டுக் கேட்டனர். மாநில அரசுகளைக் கலைப்போம் என்று கூறி ஓட்டுகேட்கவில்லை. ஆனல் தேர்தல் முடிந்ததும் மாற்றுக் கட்சியின் வசமிருந்த மாநில அரசுகளைக் கலைத்தனர்.

## ஆதரித்து இருந்தால்

நாங்கள் இந்திரா காங்கிரசை ஆதரித்து இருந்தால் அரசைக் கலைத்திருக்க மாட்டார்கள். நான் இன்னமும் முதலமைச்சராக இருந்திருக்கலாம். லஞ்ச ஊழல் வழக்குகளிலிருந்து தப்ப பதவி ஆசையுடன் சிலர் சரணாகதி அடையலாம்.

அப்படிப்பட்ட மானம் கெட்ட பிழைப்புஎனக்குத் தேவை இல்லை (பலத்த கைத்தட்டல்)

தன்மான இயக்கமாகச் செயல்படுவது கழகம். தந்தை பெரியார் அண்ணா வழியில் கழகம் செயல்படுகிறது.

தமிழகத்தில் யார் முதலமைச்சர் என்பதை தமிழக மக்கள் தான் முடிவு செய்யவேண்டும்.

இ. காங்கிரஸ் சொல்வதற்கெல்லாம் "ஆமாம்" போடுகிறார் கருணாநிதி. அவருக்கு முதல்வர் பதவி கொடுப்பதாக பிரதமர் இந்திராகாந்தி அறிவித்திருக்கிறார்.

தி. மு. க. தொண்டர்களை எடுப்பார் கைப் பிள்ளையாக்கி இருக்கிறார் கருணாநிதி. "இந்திராகாந்தியே வருக" என்று கருணாநிதி சொன்னால் தொண்டர்கள் வரவேற்கப்போக வேண்டும்.

இந்திரா காந்தியை வரவேற்க தமிழன் இளிச்சவாயனா என்று கருணாநிதி கூறியபோது கறுப்புக் கொடி காட்ட தி.மு.க.வினர் செல்ல வேண்டும்.

இந்தியை கருணாநிதி எதிர்க்க மாட்டார் என்று ப். சி. சேத்தி அறிவித்து விட்டார். அதை இன்னும் கருணாநிதி மறுக்கவில்லை.

இவ்வாறு புரட்சித்தலைவர் கூறினார்.

பிறப்பு

சென்னை, மே 15- அண்ணா நாளிதழ் அச்சுக் கோர்க்கும் பிரிவில் பணி புரியும் மகேந்திரனின் துணைவி பானுமதிக்கு ஆண்குழந்தை இன்றுகாலை பிறந்திருக்கிறது. தாயும் சேயும் நலம்.

## தத்துவமேதை டி.கே.சீனிவாசன் நிகழ்ச்சிகள்

மே 16 - பொன்னேரி; 17-ஆயிரம்விளக்கு, 18- புரசவாக்கம்

(3 பத்தி தொடர்ச்சி)

சித்துறை அமைக்கப்பட்டது.

பெரியமேட்டில் ஹஜ் பயணிகள் 350 பேர் தங்க 8கிரவுண்டு நிலம் ஒதுக்கீடு செய்யப்பட்டது புரட்சித் தலைவர் ஆட்சியில்தான்.

உலேமாக்களுக்கு மாதம் ரூ. 250 பென்ஷன் வழங்கலாம் என்ற யோசனையை மதுரையில் நடந்த மீலாத் விழாவில் எங்கள் மூலமாக புரட்சித்தலைவர்வெளியிட்டார். அதையும் இந்த ஆட்சி செயல்படுத்தவில்லை.

கைத்தறி நெசவாளருக்குப் பாதுகாப்பு கொடுத்தது புரட்சித்தலைவர் ஆட்சி. ராஜாசுப்பிரமணியம் அறிக்கையை ஏற்று, நெசவாளர்களுக்கு இவ்வளவு நேர வேலை, இவ்வளவு கூலி என்று நிர்ணயித்து பாதுகாப்பு கொடுத்தோம்

## மறுக்க முடியுமா?

இதை மறுக்க முடியுமா? மறுத்தால்அரசியலை விட்டு மட்டுமல்ல நாட்டை விட்டே சென்று விடுகிறேன்.

புரட்சித் தலைவர் ஆட்சியில் மாவட்டத் தொழில் மையம் ஆரம்பித்து 4 ஆயிரத்து 600 புதிய சிறிய தொழிற்சாலைகளை துவக்கினோம். 5 லட்சம் பேருக்கு வேலைவாய்ப்பு கொடுத்தோம்.

புரட்சித்தலைவர் மதுரையை நேசிக்கிறார். அவரது வாழ்க்கையின் திருப்புமுனை மதுரையில் தான் நடந்தது.

ரூ. 5 கோடி செலவானாலும் மதுரையில்தான் உலகத் தமிழ் மாநாட்டை நடத்த ஏற்பாடுசெய்தார் வண்டியூர் கண்மாயை அழகுபடுத்த உத்தரவிட்டார்.

மதுரையை நேசிக்கும் தலைவராக இருப்பதால் தான் புரட்சித்தலைவர் மதுரையில் போட்டியிடுகிறார்.

புரட்சித்தலைவருக்கு ஓட்டுப் போடுங்கள் என்பதைவிட, உங்களுக்கு நீங்களே ஓட்டுப் போடுங்கள் என்று கேட்டுக்கொள்கிறேன்.

புரட்சித் தலைவரின் வெற்றி சாதாரணவெற்றியாக இருக்கக்கூடாது. மிகப்பெரிய வெற்றியாக அமையவேண்டும்.

இவ்வாறு ராஜாமுகமது பேசினார்.

# ∴ 'வாரண்ட்' இல்லாமல் கைது செய்யலாம்
# ∴ கைதானவர்கள் ஜாமீனில் வர முடியாது
# ∴ தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்ய தடை
# மராட்டியம்-குஜராத் மாநிலத்தில்
# மினிமிசா அமுல்?

## ஜனநாயகத்துக்கு சவால் விடும் மத்திய அரசின் அவசரச் சட்டம்

புதுடெல்லி, மே 15-மகாராஷ்டிரம் மற்றும் குஜராத் ஆகிய மாநிலங்களில் அரசு அலுவலர்கள் மற்றும் தொழிலாளர்கள் வேலைநிறுத்தம்செய்ய தடைவிதிக்கும் அவசரச் சட்டத்தை மத்திய அரசு பிறப்பித்துள்ளது.

இச்சட்டப்படி 'வாரண்ட்' இன்றி யாரையும் கைது செய்ய முடியும். இவ்வாறு கைது செய்யப்படுபவர்கள் ஜாமீனில் விடுதலையாகவும் முடியாது.

மகாராஷ்டிரம், குஜராத் ஆகிய மாநிலங்களில் தற்போது ஜனாதிபதி ஆட்சி நடைபெறுவது தெரிந்ததே.

இந்த இரு மாநிலங்களில் பல்வேறு அரசு துறைகளிலும், மற்றும் தொழிற்சாலைகளிலும் வேலைபார்க்கும் அலுவலர்கள் பல்வேறு கோரிக்கைகளைவலியுறுத்தி வருகிறார்கள். அதோடு கோரிக்கைகள் நிறைவேறாவிட்டால் வேலை நிறுத்தத்தில் ஈடுபடப்போவதாகவும் அறிவித்தனர்.

இதையடுத்து, இந்த இரு மாநிலங்களிலும் அரசு ஊழியர்கள் மற்றும் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்யத் தடைவிதிக்கும் அவசர சட்டத்தை ஜனாதிபதி சஞ்சீவரெட்டி பிறப்பித்தார்.

இதன்படி இந்த இரு மாநிலங்களிலும் அரசு துறையைச் சார்ந்த அத்தியாவசிய சர்வீஸ்களில் பணியாற்றுவோர் வேலை நிறுத்தம் செய்யத் தடை விதிக்கப் பட்டுள்ளது.

இத் தடையை மீறி வேலைநிறுத்தத்தில் ஈடுபட்டால் 200 ரூபாய் அபராதமோ அல்லது 2மாதம் தண்டனையோ அல்லது இரண்டுமோ விதிக்கப்படும்.

வேலை நிறுத்தத்தைத் தூண்டி விடுவோருக்கு ஆயிரம் ரூபாய் அபராதமோ அல்லது ஒரு ஆண்டு ஜெயில் தண்டனையோ அல்லது இரண்டுமோ விதிக்கப்படும்-

வேலை நிறுத்தத்திற்குப் பண உதவி செய்தாலும் மேற்கண்டவாறுதண்டனை வழங்கப்படும்,

இச்சட்டப்படியாரையும் கைது செய்ய வாரண்ட் தேவையில்லை. அதோடு கைதானவர்கள ஜாமீனில் விடுதலை செய்யப்படவும் மாட்டார்கள்.

இச்சட்டம் பிறப்பிக்கப்பட்டதற்கு இந்த இரு மாநிலங்களைச் சேர்ந்த அரசு ஊழியர்களும் கண்டனம் தெரிவித்துள்ளனர்.

கே ஏ கேயை ஆதரித்து

## மகளிர் அணியினர் ஓட்டு வேட்டை

சென்னை, மே 15- ஆயிரம் விளக்கு தொகுதி கழக வேட்பாளர் கே. ஏ. கே. யை ஆதரித்து பா. அங்கமுத்து. சரசம்மாள், கண்ணம்மாள், அம்மணி, பொன்னம்மாள் மற்றும் மகளிர் அணியினர் தொடர்ந்து ஒருவாரமாக அப்பகுதியில் ஓட்டு கேட்டனர்.

நெடுஞ்சாலைத்துறை

## ஊழியர்கள் ஊர்வலம்

சென்னை, மே 15 ஊதிய உயர்வு உட்பட 5 அம்சக் கோரிக்கையை வலியுறுத்தி நெடுஞ்சாலைத் துறை ஊழியர் சங்கத்தைச் சேர்ந்த 400 பெண்கள் உட்பட 4 ஆயிரம் ஊழியர்கள் ஊர்வலம் நடத்தினர்.

நேப்பியர் பூங்காவிலிருந்து இந்த ஊர்வலம் பால்ராஜ் தலைமையில் நடந்தது.

கோரிக்கை மனு கோட்டையில் கவர்னரின ஆலோசகரிடம் தரப்பட்டது.

# பாலகிருஷ்ணன்-சிட்டிபாபு போய் விட்டனர் பாடையில்-
# இந்திராவும் கருணாநிதியும் பேசுகின்றனர் மேடையில்

# அண்ணா



வெற்றி முரசு ஒலிக்கத் துவங்கி விட்டது

# புரட்சித்தலைவர் தொகுதியில் புயல் வேகத் தேர்தல் பணி

★ மகளிர் அணியின் தீவிரம் ★

மதுரை, மே 15-புரட்சித்தலைவர் போட்டியிடும் மதுரை மேற்குத் தொகுதியில் தேர்தல பிரச்சாரம் சூடு பிடிததுள்ளது. கழகத் தொண்டர்களும, மகளிர் அணியினரும வீடு வீடாகச் சென்று புரட்சிததலைவருக்கு இரட்டை இலைச் சினனத்தில் ஓட்டுப் போடுமாறு கேட்டனர்.

மதுரை மேற்குதொகுதியில் கழகதொண்டர்களும் கூட்டணிகட்சியின்தொண்டர்களும் மகளிர் அணியினரும் புரட்சித்தலைவர் வெற்றியை உறுதிப்படுத்தி தீவிரமாகத் தேர்தல் பிரச்சாரம் செய்துவருகின்றனர்.

சமீபத்தில் பிரதமர் இந்திரா காந்தி மதுரை மேற்கு தொகுதியில் தேர்தல் பிரச்சாரம்செய்தார். பிரதமர் அப்பகுதியில் தேர்தல் பிரச்சாரம் செய்ததால் மக்களிடையே எந்தவித மாற்றமும் ஏற்படவில்லைஎன்பது அப்பகுதி கழகத் தொண்டர்கள் தொடர்ந்துதேர்தல் பிரச்சாரத்தில் ஈடுபட்டு வருவதைப் பார்த்தால் தெரிகிறது.

மதுரை மேற்குதொகுதி புரட்சித்தலைவருக்கே என்பதைக் கட்டியம் கூறி அப்பகுதியில் எங்கு பார்த்தாலும் இரட்டை இலைச் சின்னங்கள் விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டு அமைக்கப்பட்டுள்ளது. எந்தசுவரைப் பார்த்தாலும் இரட்டை இலை படம் வரையப்பட்டுள்ளது. புரட்சித்தலைவரின் படம் இல்லாத இடமே மதுரைமேற்கில் பார்க்க முடியாது. எங்கு பார்த்தாலும் புரட்சித் தலைவரின் படமும், இரட்டை இலை சின்னமும் வரையப்பட்டுள்ளது.

அப்பகுதியில் உள்ள எல்லா வீடுகளின் வாசல் களிலும் இரட்டை இலைக் கோலம் போடப்பட்டுள்ளது.

புரட்சித்தலைவர் வெற்றிக்கு அப்பகுதியில் பெண்களும், ஆண்களும் போட்டி போட்டுக் கொண்டு தேர்தல் பணியாற்றி வருகின்றனர். இரவு பகல் பாராமல் கழக அணித் தொண்டர்கள் புரட்சித்தலைவர் வெற்றிக்கு அயராது உழைத்து வருகின்றனர்.

மதுரை மேற்குதொகுதியில் சோமசுந்தரம்காலனி முத்துலிங்க நகர், செல்லூர், நரிமேடு, கரிமேடு, பொன்னகரம், அண்ணா தோப்பு, தல்லாகுளம், கோரிப்பாளையம், மீனாட்சிபுரம், ஆகிய பகுதிகளில் மகளிர் அணியினர் கழகத் தோழர்கள், கூட்டணித் தொண்டர்களுடன் வீடு, வீடாகச் சென்று ஓட்டு கேட்டனர். அப் பகுதிகளில் எங்கு பார்த்தாலும் இரட்டை இலை சின்னம் அமைக்கப் பட்டிருந்தது. புரட்சித் தலைவருக்கே எங்கள் ஓட்டு என்று போர்டுகளில ஒவ்வொரு வீட்டிலும் எழுதி வைத்திருந்தனர்.

## மகளிர் அணியினர்...

கழக மகளிர் பிரிவு செயலாளர் வளர்மதி, மற்றும் பிரமிளா காந்தி, அன்னம்மாள், வேலம்மாள், ராஜம்மாள், முருகம்மாள், லட்சுமி, ரத்தினம் மற்றும் 300க்கும் மேற்பட்ட பெண்கள் மதுரை மேற்கு தொகுதியில் புரட்சித்தலைவருக்கு ஆதரவாக ஓட்டுக் கேட்டனர். அவர்கள் வீடு வீடாகச் சென்று சந்தனம், குங்குமம், கொடுத்து ஓட்டுக் கேட்டனர். மற்றும் வெற்றிலை கொடுத்து கழக அணியின் சின்னமான இரட்டை இலைக்கு ஓட்டுபோடுமாறு கேட்டனர். மகளிர் அணியினருடன் அப்பகுதி பெண்கள் ஆர்வமாகச் சென்று புரட்சித்தலைவருக்கு ஓட்டு கேட்டனர்.

## நெடுமாறன் தொகுதியில்...

மதுரைமத்திய தொகுதியில் கழக அணியிலுள்ள தமிழ்நாடு காமராஜ் காங்கிரஸ் கட்சியின் தலைவர் நெடுமாறன் மீன்சின்னத்தில் போட்டியிடுகிறார். அப்பகுதியில் மீன்சின்னம் காணப்படுகிறது.

அதுபோல் திருப்பரங்குன்றத்தில் கழக வேட்பாளர் காளிமுத்து போட்டியிடுகிறார். "புரட்சித்தலைவரின் உண்மை ஊழியன் காளிமுத்துவிற்கே எங்கள்ஓட்டு" என்று எங்குபார்த்தாலும் எழுதப்பட்டுள்ளது. காளிமுதது வெற்றி உறுதி என்ற வகையில் கழகக் கொடிகளும், புரட்சித் தலைவரின் படங்களும், இரட்டை இலை சின்னங்களும் இப்பகுதியில் எங்கு பார்த்தாலும் காணப்படுகிறது மாற்றுக் கட்சியினர் தோற்பதுஉறுதி என்பதை அப்பகுதி மக்கள் தெளிவாக உணர்த்த இருக்கின்றனர்.

## எங்கள் ஓட்டு புரட்சித் தலைவருக்கே

தாய்மார்கள் புரட்சித் தலைவருக்கே எங்கள் ஓட்டு என்ற வகையில் அவர்கள் வீடுகளின் முகப்புகளில் கழகக் கொடிகளை ஏற்றி வைத்துள்ளனர்.

புரட்சித் தலைவரை வெல்ல முடியாது என்ற பயம் இப்போது எதிர்க் கட்சியினருக்கு வந்துள்ளது இதற்கு அறிகுறியாக எதிர்க் கட்சியின் தொண்டர்கள் சாரி சாரியாக தொடர்ந்து கழகத்தில் இணைந்துகொண்ட வருகின்றனர்.

சிவலிங்கபுரத்தில்

## தேர்தல் அலுவலகம் திறப்புவிழா

சென்னை மே 15-சென்னை 112-வதுவட்டம் சிவலிங்கபுரத்தில் தேர்தல் பணிமனை திறப்பு விழா இன்று 15-ந்தேதி மாலை6மணிக்கு கே. ராமநாதன் தலைமையில் நடைபெறுகிறது.

தொகுதி (ஆலந்தூர்) கழக வேட்பாளர் அப்துல ரசாக் தேர்தல் அலுவலகத்தை திறந்து வைக்கிறார்.

எஸ்.எம். துரையரசன், ஸ்ரீராமுலு நாயுடு, ஏ. சுப்பையா, கே. கிருஷ்ணன், ஆர். வெங்கடேசன், எம். பச்சையப்பன், கே. சாகுல்கான், எம். ஏழுமலை, மற்றும் பலர் நிகழ்ச்சியில் பங்கேற்கிறார்கள்.

## தேங்காய் சீனிவாசன் நிகழ்ச்சிகள்

17-5-80 -அரக்கோணம் சோளிங்கா, ராணிப்பேட்டை, திருப்பாற்கடல்

18-5-80 - ஆரணி, போளூர், கலசப்பாக்கம்

19-5-80திருவண்ணாமலை தண்டராம்பட்டு, செங்கம்

20-5-80- அரூர், தர்மபுரி, காவேரிப்பட்டினம்.

21-5-80- சேலம்.

-தலைமைக் கழகம்-

# என்ன கலைஞரே, சுருதி இறங்குகிறது?

234 தொகுதிகளிலும் தி.மு.க. கூட்டணியின் வெற்றிக்கொடி பறக்கும்.

-கருணாநிதி கடிதம்
முரசொலி 5-5-80

200 தொகுதிகளில் திமுக கூட்டணி வெற்றி பெறும்.

-கருணாநிதி பேச்சு
'மாலை முரசு' 13-5-80

150 இடங்களில் திமுக கூட்டணி வெற்றி பெறும.

-கருணாநிதி பேட்டி
தினத்தந்தி 15-5-80

❋

என்ன கலைஞரே! விலைவாசி ஏறுகிற வேகத்தின் அளவுக்கு உமது சுருதி இறங்கிக்கொண்டிருக்கிறது?

5ந் தேதி 234 தொகுதி என்கிறீர்-எட்டேநாளில் முப்பத்து நான்கைக் குறைத்துக் கொள்கிறீர்-அடுத்து இரண்டு நாளில் அதிலும் ஐம்பதைக் குறைக்கிறீர்.. என்னய்யா நடந்தது?

**ஏற்கனவே 200 தொகுதிகளில் வெற்றி வாய்ப்பு இருந்தது-இந்திரா வந்து போன பின் அதில் 50 தொகுதி குறைந்து விட்டது என்கிறீரா?**

அல்லது உங்கள் ஏமாற்று பேச்சுக்களை ஏற்க தமிழகம் மறுத்து விட்டது என்ற உண்மையைப் புரிந்து கொண்டீரா?

தாலிக்குத் தங்கம்-தாளிக்க வெங்காயம் பிரச்னை உம்மைத் தடுமாற வைத்து விட்டதா?

இவ்வளவு வேகத்தில் சுருதி இறங்க என்னதான் காரணம்?

தேர்தல் தினத்தன்று எத்தனை தொகுதி உங்களுக்கு என்று சொல்வீர்?

### இருபதாவது தேறுமா?

சொல்லும் சொல்லும் எதையாவது சொல்லும்!

தேர்தல் முடிவு வந்த பிறகு துணியைக் கிழித்துக் கொண்டு ஓடப் போகிறீர்....

அதுவரை எதையாவது சொல்லும்;

அமைந்தகரையில்

## தேர்தல் பணிமனை திறப்புவிழா

சென்னை, மே 15-கழகத் தேர்தல்பணிமனைத்திறப்பு விழா இன்று (வியாழன்) மாலை 7மணிக்கு அமைந்தகரை லட்சுமி டாக்கீஸ் அருகே நடக்கிறது.

பச்சையப்பன் கல்லூரி மாணவர்பேரவை தலைவர் வா. சுகுமார்பாபு விழாவிற்கு தலைமை வகிக்கிறார் செனாய்நகர் இளைஞர் சங்கத் தலைவர் எஸ். அனந்தநாராயணன் முன்னிலைவகிக்கிறார்.

அண்ணாநகர் கழக வேட்பாளர் டாக்டர் எச்.வி. ஹண்டே தேர்தல் பணிமனையைத்திறந்து வைக்கிறார்.

தலைமைக் கழக அறிக்கை எண் : 58-80

## ஒழுங்கு நடவடிக்கை

அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் அதிகார பூர்வமான வேட்பாளரை எதிர்த்து வேட்பு மனுத் தாக்கல் செய்து, சீர்குலைவு செயல்களில் ஈடுபட்டு வரும்.

திருச்சி மாவட்டம் பெரம்பலூர் தொகுதி

கே வடிவேலு

இன்று முதல் கழகத்தின் சாதாரண உறுப்பினர் பொறுப்பு உட்பட அனைத்துப் பொறுப்புகளில் இருந்தும் நீக்கப்படுகிறா. அவருடன் கழக, சார்பு மன்றத் தோழர்கள் யாரும் எவ்வித தொடர்பும் வைத்துக் கொள்ளக் கூடாது. இவ்வறிவிப்பை மீறி யாரேனும் நடந்துகொண்டால் அப்படிப்பட்டவர்கள் கடுமையான ஒழுங்கு நடவடிக்கைக்கு ஆளாவார்கள் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

திருமிகு புரட்சித்தலைவர் அவர்களின் ஒப்புதலோடும், பொதுச்செயலாளர் டாக்டர் நாவலர் அவர்களின் அனுமதியோடும் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

டாக்டர் எச். வி. ஹண்டே, எம்.எல்.சி.
அமைப்புச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி. மு. க.

சென்னை-14,
15-5-1980

## மயிலை

16-5-80 அன்று மாலை 7 மணிக்கு 128-வது வட்டம், நாகேஸ்வரராவ் புரத்தில் (சாயிபாபா கோவில் அருகே) மயிலைத் தொகுதி கழக வேட்பாளர் டி. கே. கபாலியை ஆதரித்து நடக்கும் கழகப் பொதுக் கூட்டத்துக்கு வி. எஸ். வேணு தலைமை வகிக்கிறார். அடியார், நெல்லை நக்கீரன், பூமிநாதன், மயிலை நரசிம்மன், ஜெ. பாலன், மயிலை தமிழ்மணி, மந்தைவெளி நடராசன், எஸ். ராதாபாய், திருச்சி சுசிலா, கே. பி. கண்ணன், கே, சமோராஜா, கு. சின்னப்பா, ஆர். பலராமன், து. பக்கிரி, சுப்பிரமணி மற்றும் பலர் பேசுவர்.

## நுங்கம்பாக்கம்

15-5-80 வியாழன்மாலை 7 மணிக்கு ஜெயலட்சுமிபுரத்தில் பேசுவோர்: அடியார், திருமதி சந்திரா, நிஜவீரப்பா, வ கோதண்டராமன், வீ. ரா. பசுபதி, கோ. சு. மாறன், மற்றும் பலர்.

தலைமைச் செயலக ஊழியர்களின்

# கோரிக்கைகளை கழகம் ஆட்சிக்கு வந்து நிறைவேற்றும்: போராட்டத்தை வாபஸ் பெறுக

புரட்சித்தலைவர் அறிக்கை

சேலம், மே 15-தலைமைச் செயலக ஊழியர்களின் கோரிகையை கழகம் ஆட்சிபீடம் ஏறியதும் நிறைவேற்றும் என்று புரட்சித்தலைவர் கூறினர். போராட்டத்தை வாபஸ பெறுமாறும் அவர் கேட்டுக் கொண்டுள்ளார்.

தலைமைச்செயலக ஊழியர்கள் தங்களின் 10 அம்சக் கோரிக்கைகளை முன் வைத்து கடந்த சில நாட்களாகப போராடி வருகிறார்கள்.

தலைமை செயலக அரசு ஊழியரின் கோரிக்கைகளுக்கும்போராட்டத்துக்கும் இதுவரை ஆளுநர் அரசு செவிசாய்க்கவில்லை.

இவர்களின் கோரிக்கை பற்றி புரட்சித்தலைவர் ஒரு அறிக்கை விடுத்திருக்கிறார்.

அந்த அறிக்கையில் புரட்சித்தலைவர் கூறியிருப்பதாவது:-

தலைமைச் செயலக அரசு அலுவலர்கள் இந்த நேரத்தில் போராட்டம் நடத்துவது அவர்களுடைய இன்றியமையாத தேவைகளின் எதிரொலியாக இருக்கலாம்.

இருப்பினும் தமிழ்பெரு மக்களால் தேர்ந்து எடுக்கப்படும் அரசு அமைய இரண்டொரு வாரங்கள் உள்ளன.

அதற்குள் மிகப்பெரிய நிர்வாகச் சிக்கலை இந்த நேரத்தில் உருவாக்காமல் தமிழக மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் அரசிடம் இந்த பிரச்சினையை ஒப்படைத்து நல்ல பலனை பெற முயலுமாறு இந்தப் போராட்டத்தில் சம்பந்தப்பட்ட அனைவரையும் வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்.

உங்களது கோரிக்கை மிகவும்நியாயமானது என்பதை தக்க காரணங்களை எடுத்துக்காட்டி வாதிட்டு நன்மை பெற நல்லதொரு வாய்ப்பை அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகத்தை தமிழக மக்கள் ஆட்சி பொறுப்பில் அமர்த்த இருக்கிறார்கள்.

கழக அரசு நிச்சயமாக உங்கள் கோரிக்கையை நிறைவேற்றுவதற்கு ஆவன செய்யும். தக்க நடவடிக்கை எடுக்கும் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

எனவே ஜனநாயக வழியல் தேர்தலை வெற்றிகரமாக நடத்தி முடிக்க ஆளுநர் அரசுக்கு (குடியரசு தலைவர் ஆட்சி) முழு ஒத்துழைப்பு தருமாறு கைகூப்பி பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

இவ்வாறு புரட்சித்தலைவர் கூறியிருக்கிறார்.

## ஏஜன்டுகட்கு

விற்பனையாளர்கட்கு ஏற்கனவே கடிதம் மூலமும், அறிவிப்பு மூலமும் தெரிவித்தபடி ஏப்ரல் மாத பட்டியல் தொகை மற்றும் பாக்கித் தொகையினை இதுவரை அனுப்பாதவிற்பனையாளர்களுக்கு பிரதிகள் அனுப்புவதுநிறுத்தப்படுகிறது என்பதனை தெரிவித்துக் கொள்கிறோம்.

விநியோக நிர்வாகி
'அண்ணா'

# தி. மு. க. அணி தில்லுமுல்லு...

( முதல் பக்கத் தொடர்ச்சி )

தல் அறிக்கையில்இப்படிக் கூறவல்லை.

நாங்கள் ஆட்சிக்கு வந்தால் விவசாயிகள் கடனை தள்ளுபடி செய்வோம் என்று தேர்தல் அறிக்கையில் சொல்வதற்குதிராணியற்றவர்கள் இப்போது மேடைகளில் பேசுகிறார்கள்.

நாங்கள் ஆட்சிக்கு வந்தால் விவசாயிகள் கடனைத் தள்ளுபடி செய்வோம் என்று மேடையில் பேசுகிறார்கள். இது ஏமாற்றுவேலை என்பதை மக்கள் மறந்துவிடக் கூடாது. இந்தத் தேர்தலில் விவசாயிகளை ஏமாற்றி ஓட்டு வாங்கவே இப்படிப் பேசுகிறார்கள் என்பதை மறந்துவிடக்கூடாது.

இவ்வாறு புரட்சித் தலைவர் பேசினார்.

வீரபாண்டி பொதுக் கூட்டத்தில் கழக வேட்பாளர் விஜயலட்சுமியை (சுகுமாரனின் சகோதரி) ஆதரித்துப் புரட்சித்தலைவர் பேசிய பேச்சு உருக்கமாக இருந்தது. அவர் கூறியதாவது:

எதிர்க் கட்சியினரால் கொலை செய்யப்பட்ட சுகுமாரன் இன்று இருந்திருந்தால் இந்த தொகுதியின் எம் எல் ஏ வாக இருப்பார் ஆனால் அவரையும் அவரது தந்தையையும் எதிர்க்கட்சியினர் கொலை செய்துவிட்டனர்.

ஆனாலும் சுகுமாரனின் சகோதரி விஜயலட்சுமியை இந்த தொகுதியின் வேட்பாளராக நிறுத்தியிருக்கிறோம்,

விஜயலட்சுமியின் சகோதரனும், தந்தையும் கொலையுண்ட பிறகு திருமணம் செய்து கொள்ளத் தயாராக இருந்தால் உனக்குத் திருமணம் செய்துவைக்கிறோம் என்று விஜயலட்சுமியிடம் நானும்என் மனைவியும் கூறினோம.

"என் அண்ணன் (சுகுமாரன்) இருந்தால் இந்த வீட்டுக்கும் கட்சிக்கும் என்னென்ன கடமை களைச்செய்வாரோ அவற்றையெல்லாம் செய்வதென்று நான் முடிவெடுத்திருக்கிறேன்" என்று விஜயலட்சுமி கூறினார்.

அதுபோல இன்று அந்தக் குடும்பத்தில் அப்பாவாக, அண்ணனாக இருந்து அவர் பாடுபட்டு வருகிறார். சுகுமாரனை நிறுத்துவதாககருதி இங்கு விஜயலட்சுமியை நிறுத்தியிருக்கிறோம்.

அவரை நீங்கள் வெற்றி பெற வையுங்கள். அதற்கப்புறம் அவரை எபபடி உயர்நிலையில் வைப்பது என்று எங்களுக்குத் தெரியும். அந்தக் குடும்பத்தை வாழ வைக்கும பொறுப்பு நம்முடையது.

இவ்வாறு புரட்சித் தலைவர் பேசினார்.

# அண்ணாவின் அரசைக் கலைத்தவர்கள் கூட்டு அண்ணாவின் மண்ணில் அவர்களுக்கேது ஓட்டு?